REGD. No. TN MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 * 4 பக்கம் விலை 30 கா



**நினைப்பு**

நிலை உயர்ந்திருந்தால் நினைப்பு உயர்ந்திருக்கும் நிலை தாழ்ந்திருந்தால் நினைப்பு தாழ்ந்திருக்கும் நிலைக்குத்தகுந்தாற் போல் தான்நினைப்பும் இருக்கும்

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**சத்தியம்**

கடவுளைப்பற்றிய விளக்கங்கள்கணக்கில் அடங்காதவை ஆனுல் கடவுள்என்ருல் சத்தியம் மாத்திரமே எனக் கருதி நான் வழிபடுகிறேன்.

-அண்ணல் காந்தி



மலர்: 3 (●) சென்னை 12—12—1978 செவ்வாய் (★)❋●❋(★) (★)❋●❋(★) (★)❋●❋(★) வெளியீடு 13—12—1978 புதன் (●) இதழ்: 57

★ போர்க்கால முனைப்புடன் மக்கள் துயர் துடைப்பு ★ வீடு இழந்தவர்கட்கு மூன்றே மாதத்தில் புது வீடுகள்

★ எந்த முதலமைச்சரும் செல்லாத நீலகிரி கூக்கல் துறையில் புரட்சித்தலைவர் ★

## இயற்கையின் சீற்றத்தால் மக்களின் துயர்கண்டு

# புரட்சித்தலைவர் கண்ணீர்

ஊட்டி, டிச. 12-இயற்கை உற்பாதத்தால் இன்னலுக்கு ஆளாகியிருக்கும் மக்களின் துயர்துடைக்க அரசு போர்க்கால முனைப்புடன் செயல்படுகிறது. தொடர்ந்து அவ்வாறே செயல்படும் என்று தமிழக முதல்வர்புரட்சித்தலைவர் கூறினர்.

வீடு இழந்தவர்களுக்கு வீடு கட்டிக் கொடுத்துவிட முடியும். பாலம் தேவை என்று கேட்டீர்கள் பாலமும் கட்டித் தந்துவிட முடியும். ஆனுல் உயிர் இழந்தவர்களை நினைக்கும் போது என் இதயம் ரத்தக் கண்ணீர் வடிக்கிறது என்னுல் பேசக்கூட முடியவில்லை என்று கண்கள் குளமாக உணர்ச்சியின உச்ச கட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் குறிப்பிட்டபோது கூடியிருந்த அனைவரும் கண்ணீர் விட்டனர்.

பெருமழையாலும், நிலச்சரிவாலும்சொல்லொணுத் துயருக்கு ஆளாகியிருக்கும் நீலகிரி மாவட்ட மக்களை நேற்று (திங்கட்கிழமை) இரண்டாம் நாளாக தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் சந்தித்து ஆறுதல் கூறினர்.

நாற்பது தினங்கள் வெளிநாடுகளில் அல்லும் பகலும் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு விட்டுத் தாயகம் திரும்பியவுடன் ஒய்வெடுப்போம்என்று கருதாமல் துயர் துடைக்க துடிப்புடன் ஓடி வந்த பொன்மனச் செம்மலாம் தங்கள் முதல்வர் புரட்சித் தலைவரைக் கண்ட மக்கள் இத்தனை சோகச்சூழ்நிலையிலும் தங்களது துயரங்களை மறந்து வரவேற்ருர்கள்.

தங்களது குறைகளை, கோரிக்கைகளை தாயிடம் முறையிடுவது போல புரட்சித் தலைவரிடம் தெரிவித்தார்கள்.

முதல்வர் புரட்சித்தலைவர் அத்தனை பேருக்கும் ஆறுதலும், தேறுதலும் கூறினர்.

நீலகிரி மாவட்டத்தில் இரண்டாவது நாள் சுற்றுப்பயணத்தைமுதல்வர் புரட்சித்தலைவா நேற்று (திங்கட்கிழமை) காலை 8 மணி அளவில் துவக்கினர்.

## அனைத்துக் கட்சிக் கூட்டம்

ஊட்டி நகரில் பெரும் மழையாலும், நிலச்சரிவாலும் பாதிக்கப்பட்ட இடங்களை முதல்வர் பார்வையிட்டார் நடைபெற்ற நிவாரணப் பணிகள் குறித்து ஆராயவும், தொடர்ந்து நிவாரணப்பணிகளை முடுக்கிவிடவும் ஊட்டியில் அனைத்துக் கட்சியினர் கூட்டத்தை கூட்டி முதல்வர் கலந்து ஆலோசித்தார்.

## போர்க்கால முனைப்பு

மக்களின் துயர்துடைக்க அரசு போர்க்கால முனைப்புடன் செயல்படும் என்று முதல்வர் இக்கூட்டத்தில் உறுதி அளித்தார்.

முதல்வரின் பரந்த மனப்பான்மையையும் மக்கள் பால் உள்ள அன்பினையும் அனைத்துக் கட்சியினரும் பாராட்டினர்கள்.

ஊட்டியிலிருந்து முதல்வர்புரட்சித்தலைவர்கோத்தகிரி சென்று நிலச்சரிவால் பாதிக்கப்பட்ட இடங்களைப் பார்வையிட்டார்:

ஊட்டி நகருக்குக் குடிநீர் வழங்கும் அணை நிலச்சரிவால் பாதிக்கப்பட்டு இருக்கிறது பாதிக்கப்பட்ட அணைப்பகுதிகளை முதல்வர் புரட்சித்தலைவர் பார்வையிட்டுஅவற்றைசெப்பனிட உத்தரவிட்டார். கட்டபெட்டு என்றஇடத்தில் பெருந்திரளாக மக்கள் கூடி நின்று புரட்சித் தலைவரை வரவேற்ருர்கள்.

## தொழிலாளர் வரவேற்பு

பாம் டீ எஸ்டேட்தொழிலாளர்கள் பெருந்திரளாகக் கூடி நின்று புரட்சித் தலைவரை வரவேற்ருர்கள் காரை விட்டுக்கீழேஇறங்கி முதல்வர் புரட்சித் தலைவர் ஒவ்வொரு தொழிலாளியிடமும் சென்று அவர்கள் கூறியதைப் பொறுமையுடன் கேட்டார்.

கோத்தகிரி பஸ்நிலையம் அருகே புரட்சித்தலைவரை வரவேற்கப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடி நின்ருர்கள். கோத்தகிரி டவுன் பள்ளி மாணவர்களும், மாணவிகளும்அணி வகுத்து வந்து புரட்சித் தலைவரை வணங்கி ஆசி பெற்ருர்கள்.

கூக்கல்துறை... நீலகிரி மாவட்டத்தில் ஒருகுக்கிராமம் சாலைவசதி எதுவுமற்ற இந்த ஊருக்கு எந்த முதலமைச்சரும்... ஏன்... எந்தப் பிரமுகரும் இதுவரை வந்ததில்லை. சாலைகளற்ற கல்லும், கரடுமான இக்கிராமத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள் மறக்க முடியாதவை

கூக்கல்துறை...இயற்கை இங்கே கோர நர்த்தனம் ஆடித் தீர்த்தது இந்தக் கிராமமே நிலச்சரிவால் சர்வநாசம் அடைந்தது.

மலைச் சாரலில் அமைந்துள்ளகூக்கல்துறை..இயற்கையின் கொடுஞ்சீற்றத்திற்கு ஆளாகி உள்ளது. மலையின் மீது பெரிய இடி விழுந்து மலையின் ஒருபகுதி ஒருகாட்டாற்றில் விழுந்து அக்காட்டாறுதன்பெயருக்கு ஏற்ப தட்டம்புரண்டு மேலும் இரண்டுகாட்டாறுகளுடன் கலந்து ஐக்கியமாகி பெரும் பிரவாகமாய் கூக்கல் துறைக்குள் புகுந்துஅடித்து சர்வநாசப்படுத்திவிட்டது.

மூன்னூறு வீடுகள் கொண்ட இக்கிராமத்தில் 62 வீடுகள் இடிந்து தவிடு பொடியாகி விட்டன. 12 பேர் கதி என்னவாயிற்று என்று தெரியவில்லை இரண்டு சடலங்களே மீட்கப்பட்டன.

முதல்வர் புரட்சித்தலைவரைக் கண்டதும் கூக்கல் துறை மக்கள்கண்ணீர்விட்டுக் கதறி அழுதார்கள்.

இயற்கையின் கடும் சோதனைக்கு ஆளாகிய இவர்கள் தங்கள் துயரங்களை முதல்வரிடம் கூறினர்கள். அவை அத்தனையும் கண்ணீர்க் கதைகள்.

இயற்கையின் சீற்றத்தால் வீடு இழந்த 62 குடும்பத்தினரும் கூடாரங்(டெண்ட்)களில் குடியமர்த்தப்பட்டு இருக்கிருர்கள் இந்தக் கூடாரங்களை(டெண்டுகள்) ஜப்பான் செஞ்சிலுவைச் சங்கத்தினர் வழங்கி இருக்கிருர்கள்.

இந்தக் கூடாரத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவர் சென்றுஅங்குள்ளவர்களுக்கு ஆறுதல் கூறினர் அவர்களைக் கண்டதும் முதல்வர் புரட்சித்தலைவர் கண் கலங்கினர்.

வீடிழந்தவர்களுக்கு வீடு கட்டுவதற்காக நடைபெற்ற ஓர்எளிய உணர்ச்சி மிக்க நிகழ்ச்சியில்முதல்வர் புரட்சித் தலைவர் அடிக்கல் நாட்டினர். இந்

(2-ம் பக்கம் பார்க்க)





தொரப்பள்ளியில் நடைபெற்ற ராஜாஜி நூற்றாண்டு விழாவில் நிதியமைச்சர் நாஞ்சிலார் ராஜாஜி நினைவுத் தபால் தலைகளை வெளியிட்டார்.

# கிராமப்புற வளர்ச்சிக்கு கழகஅரசின்சீரியதிட்டம் நாஞ்சிலார் அறிவிப்பு

சென்னை, டிச. 12- கிராமப்புற வளர்ச்சிக்கு தமிழக அரசு மேற்கொள்ளும் அடுக்கடுக்கான திட்டங்களை நிதி அமைச்சர் நாஞ்சிலார் விவரித்தார்

கிராமப்புற உருமாற்ற இயக்க ஆற்றல்கள்பற்றிய அகில இந்திய பயிற்சிப் பணி அரங்கு சென்னையில் நடந்தது. நிதியமைச்சர் நாஞ்சிலார் தலைமை வகித்தார். திட்டக் கமிஷன் துணைத்தலைவர் பேராசிரியர் டி. டி. லக்டவாலா துவக்கிவைத்துப் பேசினர்.

சென்னை வளர்ச்சி ஆய்வுகள் கழகத்தின் தலைவர் டாக்டர் மால்கம் ஆதிசேஷய்யா, இந்தநிறுவனத்தின் இயக்குனர் டாக்டர் இ. டி. குரியன் ஆகியோர் பேசினர்கள்.

நிதி அமைச்சர் நாஞ்சிலார் தலைமை வகித்துப் பேசுகையில் கூறியதாவது:

கிராமப் புறங்களுக்கு வளர்ச்சிகளை மாற்றும் திட்டம் என்பதுஅங்குள்ள மக்களின் சுய உதவித் திட்டம் என்ருகவேண்டும்.

பயன்பெற இருக்கும் கிராமப்புற மக்களும் இத்திட்டங்களை ஏற்று செயல்படுத்த முன்முயற்சிகளைமேற்கொள்ளவேண்டும் அவர்கள் தங்கள்பிரச்சினைகளைஉணர்ந்து அவற்றைதங்கள் முயற்சியால் தீர்த்துக் கொள்ள ஆர்வத்துடன் முயல வேண்டும.

மக்கள்முன் முயற்சிஎடுத்தபின் விஸ்தரிப்பு அதிகாரிகளும் அரசு ஏஜெண்டுகளும் அவர்களுக்கு தொழில் நுட்ப உதவிகளையும், கருவிகள் நிதி ஆகிய உதவிகளையும் வழங்க முடியும்.

அரசு மேற்கொள்ளும் திட்டங்களால் கிராமப் புறங்களுக்குத் திட்டங்கள் பயனளிக்கு மாறு மாற்றங்கள் நடந்து வருகின்றன.

தமிழ் நாட்டைப் பொறுத்தவரை கிராமப்புற மேம்பாட்டுத் திட்டம் ஒருங்கிணைந்த கிராமப்புற வளர்ச்சித்திட்டம் ஒட்டுமொத்தகிராமப்புற வளர்ச்சித்திட்டம்ஆகியவற்றை நிறைவேற்றிவருகிருேம் இந்தத் திட்டங்கள் எல்லாம சமுதாயத்தில் எளிய நிலையில் உள்ள மக்களுக்குப் பயன் அளிக்கும். இத்திட்டங்களை விரைந்து செயல்படுத்துவதன் மூலம் நமது லட்சியமானகிராமப்புற வளர்ச்சியை எட்ட முடியும்.

ஒரு கிலோ மீட்டர் தூரத்துக்குள் நல்ல குடிநீர் கிடைக்காத கிராமங்களுக்கெல்லாம் உடனடியாக குடிநீர் வழங்கும் திட்டம மேற்கொள்ளப்படுகிறது.

அரிஜனங்கள், மலைவாசியினர், பின் தங்கிய மக்கள் ஆகியோர் நலத் திட்டங்களை நிறைவேற்றுவதிலும் அரசு தீவிரமாக ஈடுபட்டுள்ளது.

இவ்வாறு நிதி அமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.

சவ ஊர்வல சம்பவம்

## தி. மு க அராஜகம்

சென்னை, டிச. 12-பிண ஊர்வலத்தை வைத்து அரசியல் பிழைப்பு தேடும் கருணுநிதிக் கட்சியினரின் முகமூடியினை கிழிக்கும் வகையில் சென்னை 81-வது வட்ட கழகத் தோழர்கள் சமீபத்தில் நடந்த பிண ஊர்வல சம்பவத்தைப்பற்றிய உண்மை விவரங்களை பொது மக்களுக்கு அறிவித்து வருகின்றனர்.

இதையறிந்த தி மு க காலிகள் நித்தியானந்தம், டன்லப் மணி ஆகியோர் தலைமையில் கருணுநிதிக் கட்சி ரவுடிகள், சென்னை 81 வது வட்ட கழக அமைப்பாளர் பெ. புகழேந்தி கழகத்தோழர்கள் அ.வ.செல்வக் கண்ணன், குப்பன், சண்முகம், இயலரசன் மனேகரன் தமிழ்மணி ஆ.ஜிஜோசப் எம் அந்தோணி போன்றவர்களை தாக்க முயற்சித்து வந்தனர்

இதுகுறித்து 81-வது வட்ட அமைப்பாளர் பெ. புகழேந்தி எப் 1 காவல் நிலையத்தில் புகார் கொடுத்துள்ளார்

## முதல்வர் காலில் விழுந்து வணங்கி நன்றி தெரிவிக்கிறேன்

# திமுக எம்.எல்.ஏ. உணர்ச்சி உரை

ஊட்டி,டிச 12 மக்கள் துயர் துடைக்க அரும்பணியாற்றும் தமிழக முதல்வரின் காலில் விழுந்து வணங்கி நன்றி தெரிவிக்கிறேன் என்று தி மு கழக சட்டமன்ற உறுப்பினர் உச்சிகவுடர் கூறினர்

தமிழக முதல்வர் புரட்சித் தலைவரின் நீலகிரி மாவட்டச் சுற்றுப்பயணத்தில் அமைச்சர் குழந்தைவேலு, கழக நாடாளுமன்ற உறுப்பினர பி. எஸ். ராமலிங்கம், திமு கழக சட்ட மன்ற உறுப்பினர் உச்சிகவுடர், ஊட்டி கோபால்,வருவாய் வாரிய முதல் உறுப்பினர் சிவசுப்பிரமணியம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

இயற்கையின் கடுஞ்சீற்றத்திற்கு ஆளான கூக்கல் துறையில் நடைபெற்றநிகழ்ச்சியில்முதல்வர் புரட்சித்தலைவருடன் தி.மு கழக எம். எல். ஏ. உச்சிகவுடரும் கலந்து கொண்டு பேசினர்

உச்சிகவுடர்பேசும்போது சொன்னாவது:-

மக்களின் துயர் துடைப்பதற்காக தமிழகமுதல்வர் அரும்பாடுபட்டு வருகிருர் காலையில் ஊட்டியில் நடைபெற்ற அனைத்துக்கட்சிக் கூட்டத்தில் பேசிய முதல்வர் மக்களின் துயர் துடைக்க போர்க்கால முனைப்புடன் செயல் படுவோம் என்று பேசினர்

மக்களின் துயர் துடைக்க அரும்பாடுபடும் தமிழக

## அகமதாபாத் கலைக்குழு சென்னைக்கு வருகிறது

சென்னை, டிச, 12- மாநிலங்களுக்கிடையேயான கலாச்சாரப்பரிவர்த்தனை திட்டத்தின் கீழ் 40 கலைஞர்கள் அடங்கிய அகமதாபாத், தர்ப்பணு அகாடமி கலைக் குழுவினர் சென்னைக்கு வருகின்றனர்.

வருகிற 17-ந்தேதி மாலை 6-30மணிக்கு சென்னை மயிலாப்பூரில் உள்ள பைன் ஆர்ட்ஸ் கிளப்பிலும், டிசம்பர் 19.ம் தேதி தஞ்சாவூரிலும், 21ந் தேதி திருச்சியிலும், 23ந் தேதி மதுரையிலும், 24 ந் தேதி விருதுநகரிலும், 26ந் தேதி திருநெல்வேலியிலும், 29ந் தேதி நாகர்கோவிலிலும் வரும் ஜனவரி 1ந் தேதி சென்னை சுற்றுலாபொருட்காட்சியிலும் இந்த கலைச் குழுவினர் நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர்.

## மண்டபம் பகுதியில் முதல்வர்

ராமேஸ்வரம், டிச. 12- புயலால் பாதிக்கப்பட்ட மண்டபம், ராமேஸ்வரம் முதலிய முகவை மாவட்டப் பகுதிகளில் முதல்வர் புரட்சித்தலைவர் சுற்றுப்பயணம் செய்தார பாதிக்கப்பட்ட மக்களைச் சந்திதது ஆறுதல் கூறி குறைகளைக் கேட்டறிந்தார்

பாதிக்கப்பட்ட மீனவர்களுக்குராமேஸ்வரத்தில் உதவித தொகை வழங்கினர்

முதல்வரின்காலில் விழுந்து வணங்கி நன்றி தெரிவிக்க தயாராக இருக்கிறேன்

இவ்வாறு உச்சிகவுடர் பேசும்போது சொன்னர்

# புரட்சித்தலைவர் கண்ணீர்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

நிகழ்ச்சிக்கு நீலகிரி மாவட்ட கலெக்டர் தருமராஜ் தலைமை வகித்தார். பி.எஸ். ராமலிங்கம் எம்.பி., உச்சிகவுடர் எல்எல்ஏ வருவாய் வாரிய முதல் உறுப்பினர் சிவசுப்பிரமணியம் ஆகியோரும்விழாவில் கலந்து கொண்டு பேசினார்கள்.



## மூன்று மாதத்தில்...

வீடு இழந்த அனைவருக்கும் இன்னும் மூன்று மாத காலத்திற்குள் வீடு கட்டிக் கொடுக்கப்படும் என்று மாவட்டக் கலெக்டர் தருமராஜ் கூறினார்

கழக நாடாளுமன்ற உறுப்பினர் பி எஸ் ராமலிங்கம்பேசும்போது "ஆண்டவன் இருக்கிறானோ இல்லையோ தமிழக மக்கள் புரட்சித் தலைவரைத்தான் ஆண்டவனாகக் கருதுகிறார்கள்" என்று குறிப்பிட்டார்

## புரட்சித் தலைவரின் உணர்ச்சிப் பேருரை

இந்த நிகழ்ச்சியில் முதல்வர் புரட்சித்தலைவர்பேசும்போது உணர்ச்சி மிகுதியால் நெகிழ்ந்து போனார். அவருடைய பேச்சைக் கேட்ட அனைவரும் மெய் மறந்து கண்கலங்கிய நிலையில் இருந்தனர்.

புரட்சித் தலைவர் பேசும் போது கூறியதாவது:

நீங்கள் அடைந்த துன்பங்களையும், தாய்மார்கள் சிந்திய கண்ணீரையும் கண்ட எனக்கு பேச்சு வரவில்லை. என் இதயம் ரத்தக் கண்ணீர் வடிக்கிறது.

புயலாலும், வெள்ளத்தாலும் நிலச்சரிவாலும் 12 உயிர்கள் பறிக்கப்பட்டு விட்டன. வீடு இழந்தவர்களுக்கு வீடுகட்டிக் கொடுத்துவிடலாம் இந்த ஊருக்கு வரும் வழியில் பாலம் கட்ட வேண்டும் என்று கேட்டீர்கள் அதையும் கட்டிக் கொடுத்து விடலாம் ஆனால் பறி போனஉயிர்களை நினைக்கும் போது மனம் பதறுகிறது.

## வறுமையே வாழ்வா?

பிறப்பும், இறப்பும், இளமையும், முதுமையும், இயற்கை. ஆனால் இப்படி படுபயங்கரமாக உயிர்கள் பறிக்கப்படுவதும்இயற்கை தானா?

பிறப்பும், இறப்பும் இயற்கையாக இருக்கலாம் ஆனால் வறுமையும் துயரமும் இயற்கை அல்ல உருவாக்கப்பட்ட கொடுமை.

வறுமையைப் போக்க, ஏழ்மையை இல்லாமல் செய்ய கழக அரசு தன்னை அர்ப்பணித்துக் கொண்டு இருக்கிறது அதுவரை நான் ஓய மாட்டேன்.

## விளம்பர வீடுகள்

வீடுகள் எவ்வளவு சிக்கிரத்தில் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கட்டித் தரப்படும் அதற்கு நீங்களும் முன்வந்து உதவ வேண்டும்.

வெறும் விளம்பரத்திற்காக வீடுகளைக் கட்டிவிட்டு அது அடுத்த மழையிலேயே இடிந்து விடும் நிலையை இநத அரசு அனுமதிக்காது பாதுகாப்பான பத்திரமான கெட்டியான வீடுகளை உருவாக்க நீங்களும் உங்கள் உடலுழைப்பைத் தரவேண்டும்

இந்த ஊருக்கு வரும் வழியில் மூன்று லட்ச ரூபாய் செலவில் பாலம் கட்டும் வேலைஉடனடியாக தொடங்கப்படும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசும் போது கூறினார்.

68 பேருக்கு நிலப்பட்டாக்களை வழங்கிமுதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றினார்.

கோவைக்குவரும் வழியில் இலங்கையில் இருந்து குடிபெயர்ந்தோர் அளித்த வரவேற்பில் முதல்வர் கலந்து கொண்டார்.

வழியெங்கும் ஏராளமான கழகக் கொடிகளை புரட்சித் தலைவர் ஏற்றி வைத்தார் ஏராளமான குழந்தைகளுக்குப் பெயர் சூட்டினார்.

---

ஜனதா அரசியல் இன்றைய நிலவரம்

# நீயா? நானா? என்ற போட்டியால் மத்திய அரசு பணிகள் முடக்கம்

ஜனதா கட்சி மேலிடத்தில் நடைபெறும் மோதல்களும் பூசல்களும் மத்திய அரசின் நிர்வாகத்தை எந்த அளவு பாதிக்கிறது என்பதை 'இந்து' ஏட்டில் ஜி. கே. ரெட்டி தமது சிறப்புக் கட்டுரையில் சுட்டிக்காட்டியுள்ளார்.

இன்றைய (12-12-78)இந்துவில் வெளிவந்த சிறப்புக் கட்டுரையின் முக்கிய பகுதிகள் வருமாறு:

ஜனதா கட்சி அமைச்சர்களின் மோதல் காரணமாக மத்திய அரசின் நிர்வாகம் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. இது வேதனை தரத்தக்கதாகும்.

ஜனதா அரசு கையாண்டு வரும் நடைமுறையின் காரணமாக மந்திரிசபை ஆட்சி முறையே சோதனைக்கு ஆளாகியிருக்கிறது. பிரதமரின் அதிகாரம், அவருடைய பாத்திரம் இவற்றைப் பற்றி மத்திய அமைச்சர்களே பகிரங்கமாக கேள்வி எழுப்பி வருகிறார்கள்.

யார் உயர்ந்தவர் என்கிற போட்டியின் காரணமாகவும் நிச்சயமற்ற தன்மை காரணமாகவும் நாட்டிற்குத் தேவையான முக்கிய முடிவுகள் எதுவுமே எடுக்கப்படவில்லை. வழக்கமான அரசு அலுவல்கள் நடைபெறுகிறதே தவிர பெரிய அமைச்சர்களிடமிருந்து எந்தவித வழிகாட்டுதலுமில்லை.

மந்திரிசபை என்னவோ அடிக்கடி கூடுகிறது. விஷயங்கள் விவாதிக்கப்படுகின்றனவே தவிர முக்கிய முடிவுகள் எதுவும் எடுக்கப்படுவதில்லை.

கட்சியையும் அரசையும் தலைமை தாங்கி நடத்தும் தகுதி மொரார்ஜிக்கு இல்லை என்று கருதும் சில அமைச்சர்கள் இருக்கிறார்கள். இதனால் எதிர் காலத்தில் அரசு எத்தகைய பாதையில் செல்ல வேண்டும் என்பதைப்பற்றிய விவாதங்கள் மந்திரி சபையில் நடப்பதில்லை.

மத்திய அரசின் உயர்தலைமையில்- முக்கிய முடிவுகளை எடுக்கும் உயர்மட்டத்தில் இதன் காரணமாக ஒரு முடக்குவாதம் பீடித்திருக்கிறது.

இதை சாதகமாகபயன்படுத்திக்கொண்டு அதிகார வர்க்கம் நிர்வாக நடவடிக்கைகளைத் தள்ளிப்போட்டு வருகிறது.

நாங்கள் ஒருங்கிணைந்து செயல்படுவோம். தனித் தனிக்கட்சிகள் அல்லஎன்று சிலகாலம்வரை சொல்லிக் கொண்டு வந்த ஜனதாக் கட்சி தலைவர்கள் கூட இப்போது அப்படிச சொல்வதில்லை.

எப்படியோ ஜனதா ஒன்றாக இருக்கிறதே தவிர தங்கள் அதிகாரத்தை நாட்டின் நலனுக்காக பயன்படுத்த ஜனதாவால் இயலவில்லை.

ஜனதாவில் உள்ள சில சக்திகள் ஆதிக்கம் தங்கள் கைகளில் வரவேண்டும் என்று முயற்சி செய்து வருகின்றன; அதிகாரகேந்திரங்களை கையகப்படுத்திக்கொள்ள அயராது பாடுபட்டு வருகின்றன. தாங்கள் நினைக்கிறபடி தங்கள் கரங்களில் அதிகாரம் வரவில்லையெனில் மொத்த வீட்டையும் நாசப்படுத்துவதற்குக் கூட இந்த சக்திகள் தயங்காது. இதன் காரணமாக இந்த தேசம் ஒருபெரிய சிக்கலில் வேதனை தரத்தக்க நிலையில் மாட்டிக்கொண்டிருக்கிறது.

எந்த நேரத்திலும் வெளியேறத் தயார் என்று கூறும் சில மத்திய அமைச்சர்கள் உட்கட்சி அரசியலில் ஈடுபடுகிறார்களே தவிர அரசு பணிகளைக் கவனிப்பதில்லை.

அற்ப விவகாரங்களிலேயே கவனம் செலுத்தப்படுகிறது பீகாரில் வன்முறைக் கலவரங்கள் உத்தரபிரதேசத்திலோ வகுப்புக் கலவரங்களும் விவசாயிகள் கிளர்ச்சியும் நிலைமையை மோசமாக்கி வருகின்றன.

இந்த நிலையில் டெல்லியில் உள்ள தலைவர்களோ சரண்சிங்கை எப்படி சேர்த்துக் கொள்வது, இந்திராவுக்கு என்ன தண்டனை கொடுப்பது என்பதில் தான் நேரத்தைச் செலவழித்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஜி கே ரெட்டி கட்டுரை
(இந்து 12-12-78)

## இரட்டைக் குரல்

ஜனதா கட்சியின் பொதுச் செயலாளர்களில் ஒருவரான நானாஜிதேஷ்முக் சரண்சிங்பற்றி பின்வரும் கருத்தை வெளியிட்டுள்ளார்.

"உதவிப் பிரதமர் பதவியை சரண்சிங் ஏற்றுக் கொண்டிருக்கவேண்டும் என்பதுதான் எனது விருப்பம் ஆனால் மந்திரிபதவியை ஏற்பதில்லை என்று சரண்சிங் முடிவு செய்திருப்பதும் எனக்கு மகிழ்ச்சியைத் தருவதே ஆகும். அரசில் பதவி வகிக்காமலேயே மக்களுக்கு அதிக சேவை செய்ய முடியும்" என்று நானாஜிதேஷ்முக் கூறியுள்ளார்.

## ஜனதா அகில இந்திய மாநாடு நடக்குமா?

வரும் ஆண்டு ஜனவரி மாதத்தில் ஜனதா கட்சியினுடைய அகில இந்திய மாநாடு ஒரிசா மாநிலத்தில் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. இந்த அகில இந்திய மாநாட்டை நடத்தும் பொறுப்பை ஒரிசா மாநில ஜனதா கட்சி ஏற்றிருந்தது ஆனால் ஜனதா கட்சி தலைமையில் ஏற்பட்டுள்ள மோதல் காரணமாக இந்த மாநாட்டை நடத்தும் பொறுப்பை ஏற்க முடியாது என்று ஒரிசா மாநில ஜனதா கட்சி அறிவித்துள்ளது.

## ஜனதா-மார்க்சிஸ்ட் பகிரங்க மோதல்

மார்க்சிஸ்ட் ஆட்சி நடக்கும் திரிபுரா மேற்குவங்க மாநிலங்களைச் சேர்ந்த ஜனதாசட்டமன்ற உறுப்பினர்களின் கூட்டம் கல்கத்தாவில் நடைபெற்றது. ஜனதா கட்சி பொதுச்செயலாளர் ராமகிருஷ்ண ஹெக்டே, சுரேந்திரமோகன் எம்.பி. இருவரும்இந்தக்கூட்டத்தில் பேசினார்கள். மார்க்சிஸ்ட் ஆட்சியைப்பற்றிராமகிருஷ்ண ஹெக்டே கடுமையாக விமரிசனம் செய்து பேசினார்.

அவர் கூறியதாவது:-

"மேற்கு வங்கம், திரிபுரா மாநிலங்களில் நடைபெறும் மார்க்சிஸ்ட் ஆட்சிகள் அந்த மாநில ஜனதா எம் எல் ஏக்களை உதாசீனம் செய்கின்றது.

மேற்கு வங்க சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை 294. இதில் 29 பேர் ஜனதாக் கட்சியைச் சேர்ந்தவர்கள் ஆனால் மேற்கு வங்கத்தில் எந்த கமிட்டியிலும், சட்டமன்ற கமிட்டிகளிலும் ஜனதாவுக்கு உரிய பிரதிநிதித்துவம் தரப்படவில்லை. ஆனால் நாடாளுமன்றத்தின் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கை 547, இதில் மார்க்சிஸ்ட் கட்சியைச்சேர்ந்தவர்கள் 22பேர்மட்டுமே. எனினும் பல்வேறுமுக்கிய கமிட்டிகளிலும் மார்க்சிஸ்ட் கட்சிக்கு இடம் அளிக்கப்பட்டுள்ளது. மிகமுக்கியமான கமிட்டி ஒன்றுக்கு மார்க்சிஸ்ட் எம். பி. தலைவராகக் கூட இருக்கிறார்.

மேற்கு வங்கத்தில் தனியாருடைய சிறிய மீன் பண்ணைகள் அழிக்கப்பட்டு வருகின்றன. பெயர் தெரியாத ஆசாமிகள் எல்லாம் குத்தகைதாரர்களாக பதிவு செய்யப்படுகிறார்கள்.

மேற்கு வங்க ஆளும் கட்சியான மார்க்சிஸ்டுகளுக்கு எதிராக எந்த புகார் கொடுத்தாலும் அது கவனிக்கப்படுவதில்லை.

இதைப்பற்றியெல்லாம் ஜனதா கட்சித்தலைவர் சந்திரசேகரிடம் புகார் கூறப்போகிறேன்" என்று ராமகிருஷ்ண ஹெக்டே கூறினார்.

—நாளை: குஷ்வந்த் சொன்ன குட்டிக் கதைகள்

செய்தித் தொகுப்பு

---

தவறை உணர்ந்த

## 11 மாணவர்களை மீண்டும் சேர்க்க முதல்வர் அனுமதி

சென்னை, டிச 12— தற்காலிகமாக நீக்கி வைக்கபபட்டிருந்தமருத்துவசகல்லூரிமாணவர்கள் பதினொருபேர் தங்கள்செயலுககு முதல்வர் புரடசித்தலைவரிடம் மன்னிபபுக்கடிதம கொடுததனர். அவர்களை கல்லூரியில் சேர்ததுக்கொள்ள முதல்வர் புரட்சித்தலைவர் அனுமதி அளித்தார்

தஞ்சை மருத்துவக் கல்லூரியில் நடந்த ஒருவன்முறை சம்பவத்தில் வெளியாட்களை கொண்டு வந்து தாக்குதல் நடத்தியதன் காரணமாக 11மாணவர்கள் கல்லூரியிலிருந்து தற்காலிகமாக நீக்கி வைக்கப்பட்டிருந்தனர்.

இவர்கள் தங்கள் செயலுக்கு வருந்தினார்கள். தங்களுடைய செயலுக்கு வருத்தம் தெரிவித்து மன்னிப்புக் கடிதம் எழுதி வெளிநாட்டில் இருந்து திரும்பிய முதல்வர் புரட்சித்தலைவரிடம் கொடுத்தனர்.

இந்த மாணவர்களைமீண்டும் மருத்துவக்கல்லூரியில் சேர்த்துக் கொள்ளும்படியும், அவர்கள் வருகிற தேர்வில் தேர்வு எழுத அனுமதிக்கும் படியும் முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார்.

இந்த தகவலை மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் திருச்சி ஆர். சவுந்தரராசன் "அண்ணா" நிருபரிடம் தெரிவித்தார்.

திருவரங்கம் ரங்கநாதர் கோயில் கோபுரத்தின்மீது அண்மையில் இடிவிழுந்தது. இடிவிழுந்த கோபுரத்தையும், கோயிலையும் மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் திருச்சி சவுந்தரராசன் பார்வையிட்டார்

## அமைச்சர் சவுந்தரராசன் நிகழ்ச்சிகள்

டிச. 13-காலை 10 மணி விழுப்புரம் நந்தி வாடியில் மேல் நிலை நீர்த்தொட்டி திறப்பு விழா 11 மணி சிறுவந்தாடு கொடியேற்று விழா 12 மணி பாக்கம் மேல் நிலை நீர்த் தொட்டி, திறப்பு விழா, மாலை 4 மணி வழுவனூர் நகர ஊராட்சி, வரவேற்பு மேல்நிலை நீர்த்தொட்டி திறப்புவிழா,

மாலை 5மணி- வழுவனூரில் எம்.ஜி.ஆர். மன்ற வரவேற்பு. மாலை 5-30 மணி- பொய்யாப்பாக்கம்- சிறு மருத்துவமனைத் திறப்பு விழா- இரவு 7மணி வழுவனூரில் பொதுமக்கள் வரவேற்பு

*

## சட்டக் கல்லூரி மீண்டும் திறப்பு

சென்னை: டிச. 12- சென்னை சட்டக் கல்லூரி வருகிற 14ஆம் தேதி (வியாழக்கிழமை) திறக்கப்படுகிறது.

மாணவர்களிடையே ஏற்பட்ட மோதலினால் நவம்பர் 25ந் தேதி சட்டக் கல்லூரி மூடப்பட்டது.

## வானொலி நிலைய அதிகாரி பார்வைக்கு

சென்னை வானொலி விவித்பாரதி வர்த்தக ஒலிபரப்பு நிகழ்ச்சியில் திரைப்படப் பாடல்களை ஒலிபரப்பும்போது பல தவறுகள் நடக்கின்றன ஒரு கவிஞர் எழுதிய பாட்டை மற்றொரு கவிஞர் எழுதியதாகத் தவறான அறிவிப்பு வருகிறது.

கடந்த 9-ந்தேதி காலையில் ஒலிபரப்பிய விவித்பாரதி வர்த்தக ஒலிபரப்பில் "கிழக்கே போகும் ரயில்" என்ற படத்தில் "மாஞ்சோலைக் கிளிதானோ மான்தானோ வேப்பந்தோப்புக் குயிலும் நீதானோ" என்ற பாடல் ஒலிபரப்பப்பட்டது. இது கவிஞர் முத்துலிங்கம் எழுதிய பாடலாகும். ஆனால அவர் பெயரைச் சொல்வதற்குப் பதில் இன்னொருவர் பெயரைப் பெண் அறிவிப்பாளர் தவறாகக் கூறினார்.

இதைப்போல் சிலர் எழுதிய பாடல்கள் மற்றவர் எழுதியதாகவும் அறிவிக்கப்படுகிறது.

தான் எழுதிய பாடலை இன்னொருவர் எழுதியதாக அறிவிக்கப்படும்போது அதை எழுதிய கவிஞரின மனநிலை எவ்வளவு பாதிக்கபபடும் எனபதை வானொலி நிலையத்தார் உணரக் கடமைப்பட்டு இருக்கிறார்கள்.

## புயலில் மூழ்கிய படகுகளை எடுப்பதில் கடற்படை தீவிரம்

எட்மண்ட் பார்வையிட்டார்

ராமேஸ்வரம், டிச. 12- புயலின்போது கடலில் மூழ்கிய படகுகளை எடுக்கும் பணியில் கடற்படையினர் ஈடுபட்டிருக்கிறார்கள் புயலால் சேதம் அடைந்த பகுதிகளுக்கு அமைச்சர் எட்மண்ட் சென்று நிவாரணப் பணிகளைப் பார்வையிட்டார்.

ராமேஸ்வரம், மண்டபம் பகுதிகளில் புயல்சேதம் ஏற்பட்ட இடங்களுக்கு உணவு அமைச்சர் எட்மண்ட் சென்று உதவிப் பணிகளைப் பார்வையிட்டார்.

பாதிக்கப்பட்ட மீனவர்களையும், மற்றவர்களையும் சந்தித்து குறைகளைக் கேட்டறிந்தார்.

வடதாலைப் பகுதிமக்கள் தங்களுக்குப் போடப்படும் உணவுக்கு நல்ல அரிசியைப் பயன்படுத்துமாறு அமைச்சரிடம் கூறினார்கள். நல்ல அரிசி போட அமைச்சர் உத்தரவிட்டார்.

பாம்பன் பகுதியில் புயலின் போது உடைந்த படகுகளை அமைச்சர் எட்மண்ட் பார்வையிட்டார்.

அந்தப் பகுதி மக்களுக்கு உணவு, உடை வழங்க ரூ 50 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

கடலில் மூழ்கிய படகுகளை எடுக்க கடற்படை வரவழைக்கப்பட்டுள்ளது. கடற்படையினரை எட்மண்ட் வரவேற்றார். படகுகளை எடுக்கும் பணி திவிரமாக நடந்துவருகிறது.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு தொடர்ந்து ஒரு மாதத்துக்கு அரிசி, மண்ணெண்ணை வழங்கப்படுகிறது.

## புரட்சித் தலைவரிடம் உதகை அமீது முறையீடு

உதகை, டிச.12-உதகை வந்த தமிழக முதல்வர் புரட்சித் தலைவரிடம் உதகை கழக முன்னணித் தோழர் அ. சா. அமீது கழக சார்பில் ஒரு மகஜர் கொடுத்தார் உதகை பகுதிகளில் நிலச்சரிவாலும் மழையாலும் ஏற்பட்ட சேத விவரங்களைத் தெரிவித்து நிவாரணப் பணிகள் பற்றி கோரிக்கை விடுத்து மகஜர் கொடுத்தார்.

## கழகத் தோழர் மீது கடும் தாக்கு

சென்னை, டிச. 12-முதல்வர் புரட்சித்தலைவர் வெளிநாடு சென்றுதாயகம்திரும்பிய அன்றுசென்னை 47வது வட்ட கழகத் தோழர்கள் 35 பேர் சிந்தாதிரிப்பேட்டை பாலம் ஓரமாக வந்து கொண்டிருந்தனர்

அப்போது மாற்றுக் கட்சியை சேர்ந்த 20பேர் எதிரே வந்து முதல்வர் புரட்சித் தலைவரைப் பற்றியும் கழகத்தையும் மிகவும் இழிவாகப்பேசினர்.

இதைக் கழகத்தினர் கேட்டதும், மாற்றுக் கட்சியை சேர்ந்த அவர்கள் திரும்பி வந்து "நீதான் மு. பா. மாரியா" என்று ராமசாமியை கடுமையாகத் தாக்கினர். வலதுகால் முட்டியிலும் இடது பக்க மார்பிலும் இடது கண்ணிலும் பலத்த காயங்கள் ஏற்பட்டன.

பலத்த காயங்களுடன் ராமசாமி அரசு பொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்.

இச்சம்பவம்குறித்து எப்1 காவல் நிலையத்தில் கழகத் தோழர்கள் புகார் மனு கொடுத்துள்ளனர்.

## தமிழ்நாட்டில் 150 மினி பஸ்கள்: அமைச்சர்பொன்னையன் அறிவிப்பு

சென்னை, டிச. 12- தமிழ்நாட்டில் 150 மினி பஸ்கள் விடப்படும் என்று போக்குவரத்துத்துறை அமைச்சர் பொன்னையன் தெரிவித்தார்.

இது பற்றி அமைச்சர் பொன்னையன் நிருபர்களிடம் கூறியதாவது:

சென்னை ஜார்ஜ்டவுன் உட் பகுதிகளில் இருந்து பாரிமுனைக்கு விரைவில் மூன்று மினி பஸ்கள் விடப்படும்.

இதையும் சேர்த்து மொத்தம் 150 மினி பஸ்களை விடுவதற்கு அரசு திட்டமிட்டு உள்ளது.

தற்போது வட ஆற்காடு மாவட்டத்தில் 14 மினி பஸ்களும், மதுரை மாவட்டத்தில் 4 மினி பஸ்களும், தென்னாற்காடு மாவட்டத்தில் 3 மினி பஸ்களும், தருமபுரி மாவட்டத்தில் 3 மினி பஸ்களும் ஓடுகின்றன.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## அமங்கலக் கருணாநிதி பேசலாமா?

முதல்வர் வெளிநாடு சென்று திரும்பியது 5கோடி தமிழக மக்களுக்கு 'மங்கல நிகழ்ச்சி'. அதிலே சவ ஊர்வலததைப் புகுத்திய கருணாநிதிக்கு வேறு மாதிரியாக இருக்கலாம்!

மோகன் குமாரமங்கலமும் பாலதண்டாயுதமும் விபத்தில் மாண்டு தமிழகமே திகைத்துததேம்பிய நேரத்தில் இனிப்பு வழங்கி தனது பிறந்த நாளைக் கோலாகலமாகக் கொண்டாடிய கருணாநிதியா மங்கலம் அமங்கலம் பற்றிப் பேசினால் நாடு ஏற்குமா?

## சென்னை, திருச்சி, சேலம் பகுதிகளில்

# 3 சிமெண்ட் ஆலை கழக அரசு திட்டம்

### அமைச்சர் பொன்னையன் தகவல்

சென்னை, டிச. 12- சென்னை, திருச்சி, சேலம் ஆகிய பகுதிகளில் 3 புதிய சிமெண்ட் ஆலைகளை அமைக்க தமிழக அரசு முடிவு செய்துள்ளது, இத்தகவலை அமைச்சர் பொன்னையன் தெரிவித்தார்.

தமிழ்நாடு அரசு நெடுஞ்சாலை ஊரகப் பணித்துறையின் சார்பில் நெடுஞ்சாலை பொறியாளர் பயிற்சிப் பணிமனையை போக்குவரத்துத் துறை அமைச்சர் பொன்னையன் திறந்து வைத்தார். ஓய்வு பெற்ற பிரதம என்ஜினியர் கே. கே. நம்பியார் தலைமை வகித்தார்.

அமைச்சர் பொன்னையன் பேசுகையில் கூறியதாவது:

தமிழ்நாட்டின் 3 மாத சிமெண்ட் தேவை மூன்றரை லட்சம் டன். மத்திய அரசு இந்தத் தேவைக்கு மேல் 25 ஆயிரம் டன் சிமெண்டை அதிகமாக ஒதுக்கி இருக்கிறது.

இதன் காரணமாக சிமெண்ட் பற்றாக்குறை ஏற்படாது

5முதல் 10 மூட்டை வரை சிமெண்ட் தேவைப் படுவோருக்கு கோட்டா அளிக்கும் முறை தற்போது எளிதாக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் 3 புதிய சிமெண்ட் தொழிற்சாலைகள் திறக்கப்பட இருக்கின்றன. திருச்சி மாவட்டத்தில் ஒன்றும், சேலம் மாவட்டத்தில் ஒன்றும், சென்னை நகரில் துறைமுகத்திற்கு அருகில் ஒன்றுமாக இத்தொழிற்சாலை நிறுவப்படும்.

### பொதுத்துறை

திருச்சியிலும், சேலத்திலும் நிறுவப்படும் சிமெண்ட் ஆலைகள் தமிழக அரசின் பொதுத்துறையால் நடத்தப்படும் சென்னை நகரில் நிறுவப்படும் ஆலை மத்திய அரசால் நடத்தப்படும்.

சென்னையில் நிறுவும் தொழிற்சாலையில் இறக்குமதி செய்யப்படும் கச்சாப் பொருளிலிருந்து சிமெண்ட் உற்பத்தி செய்யப்படும்.

அங்கு உற்பத்தியாகும் சிமெண்டில் ஒரு பகுதியை தமிழக அரசுக்குத் தர மத்திய அரசு சம்மதித்துள்ளது.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## கழக எம். எல். ஏ. மகன் மரணம்

கடலூர், டிச. 12- கடலூர் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் ஹிலாவின் இரண்டு வயது மகன் சமீமுல்அன்சாரி நேற்று (திங்கட்கிழமை) மரணமடைந்தான்.

சமீமுல் அன்சாரி ஹிலாவின் ஒரே மகன் ஆவான். சிறுவன் சமீமுல் வீட்டின் அருகே விளையாடிக் கொண்டிருந்தான். அவனுடைய கழுத்தில் இருந்த மணிமாலை தவறி சாக்கடைக்குள் விழுந்து விட்டது.

அதை எடுக்க முயற்சித்த போது சிறுவன் சமீமுல் சாக்கடைக்குள் தவறி விழுந்து மூச்சுத் திணறி பரிதாபமாக இறந்து போனான்.

## கரன்சிங் போக்கு: அப்துல்லா கண்டனம்

ஸ்ரீநகர், டிச. 12- காஷ்மீர மாநில அரசுக்கு எதிராக சமீபத்தில் நடந்த பெரிய கலவரங்களுக்கு முன்னாள் மத்திய அமைச்சர் கரன்சிங்கே காரணம் என்று காஷ்மீர் முதல்வர் ஷேக் அப்துல்லா குற்றம் சாட்டியுள்ளார்.

கரன்சிங் கலவரங்களைத் தூண்டி வருவதாகவும் ஷேக் அப்துல்லா கூறியுள்ளார். இந்திரா காந்தியின் அமைச்சரவையில் இடம்பெற்று இருந்த கரன்சிங் இப்போது இந்திராவிற்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்தி இருப்பது நினைவு இருக்கலாம்.

## ராஜாஜி வரலாற்றை எழுத நிபுணர்களுக்கு தமிழக அரசு உதவும்

### அமைச்சர் நாஞ்சிலார் அறிவிப்பு

ஒசூர், டிச. 12. மூதறிஞர் ராஜாஜியின் வாழ்க்கை வரலாற்றை எழுதும் நிபுணர்களுக்கு தமிழக அரசு உதவி செய்யும் என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.

மூதறிஞர்ராஜாஜி பயன்படுத்திய பொருட்கள் கொண்ட பொருட்காட்சி அவர் பிறந்த வீட்டில் அமைக்கப்பட்டுள்ளது. நிதியமைச்சர் நாஞ்சிலார் பொருட்காட்சியை திறந்து வைத்தார்.

தருமபுரி மாவட்டம் ஒசூர் அருகே உள்ள தொரப் பள்ளியில் மூதறிஞர் ராஜாஜி பிறந்த வீடு நினைவுச் சின்னம் ஆக்கப்பட்டு, பொருட்காட்சி அமைக்கப்பட்டுள்ளது.

ராஜாஜி பயன் படுத்திய சட்டைகள் உள்பட அவர் பயன்படுத்திய பலபொருள்கள் இந்த பொருட்காட்சியில் உள்ளன.

### நாஞ்சிலார்

நிதியமைச்சர் நாஞ்சிலார் பொருட்காட்சியை துவக்கிவைத்தார் ராஜாஜியின் நூற்றாண்டு விழாவையொட்டி மத்திய அரசு வெளியிட்டுள்ள தபால் தலையையும் நிதியமைச்சர் நாஞ்சிலார் வெளியிட்டார்

நிதியமைச்சர் நாஞ்சிலார் பேசியதாவது:

மூதறிஞர் ராஜாஜியின் 100 வது பிறந்தநாளையொட்டி அவர் வாழ்ந்த வீட்டை தேசஉடமையாக்கி நினைவுச் சின்னம் ஆக்க வேண்டும் என்று முடிவு செய்தபடி இந்த விழா நடக்கின்றது.

இந்த விழாவில் கலந்து கொள்வது என் வாழ்க்கையிலேயே கிடைத்த பெரும் பேறாகும்.

1962-ம் ஆண்டு முதல் நான்ராஜாஜியுடன்நெருங்கிப் பழகினேன். எவ்வளவு பெரிய பிரச்சினையானாலும் தன்னுடைய கொள்கையின் படி யாருக்கும் பயப்படாமல் ஒரு முடிவுக்கு வந்துவிடும் அவர், அரசியல் உலகில் ஒரு பிரச்சினைக்குரிய மனிதராக விளங்கி வந்தார். எதிர்ப்புகளைக் கண்டு அலைப்படாத ராஜதந்திரி அவர்.

1937-ல் இந்தியைக் கட்டாயமாக படிக்க வேண்டும் என்று சொன்ன அவரே பிறகு இந்தியைத் திணித்தால் நாடு உடையும் என்றும் கூறினார்.

நான் முதன் முதலில் நாடாளுமன்ற உறுப்பினர் ஆனதும் அவரைப்பார்க்கச் சென்றபோது, பிரிவினை வாதத்தை விட்டு விடச் சொன்னார். ஆனால் அவரே மாநில சுயாட்சி தேவை என்றும் பின்னர் சொன்னார்.

பிறந்த இடத்தைக் கொண்டு மனிதனை எடைபோடும் சமுதாயத்தின் நிலைமை மாற வேண்டும் என்பதில் ராஜாஜி முன் மாதிரியாக இருந்தார்.

### ராஜாஜியின் வரலாறு

ராஜாஜியின் வாழ்க்கை வரலாற்றை எழுத, வரலாற்று அறிஞர்கள் முன் வரவேண்டும். அவர்களுக்கு தேவையான உதவிகளை அரசு செய்யும்.

ராஜாஜி படித்த உயர்



நிலைப்பள்ளிக் கூடத்தை சீரமைக்க அரசு ஆவன செய்யும்.

### புனிதமான உணர்வு

ராஜாஜி பிறந்த வீட்டில் நுழைந்ததும் புனிதமான ஒரு உணர்வை பெற்றேன் எவ்வளவு பெரிய அறிவாளி. இந்த சின்ன கிராமத்தில், சின்ன வீட்டில் வறுமைத் தேளால் கொட்டப்பட்டு போராடி வெற்றி பெற்று இருக்கிறார்.

சில ஊர்கள் அங்கு பிறந்த மனிதர்களால் பெருமை அடையும். அதற்கு ராஜாஜி பிறந்த தொரப்பள்ளி சான்றாகும் என்றும் நாஞ்சிலார் கூறினார்.

சட்ட மேலவைத் தலைவர் ம. பொ. சி. விழாவில் கலந்து கொண்டு பேசியதாவது:

"நான் எத்தனையோ முறை ராஜாஜியை நேரில் சந்தித்து இருக்கிறேன். ஆனால் இப்போதுதான் முதல்தடவையாக ராஜாஜியின் பிறந்த ஊருக்கு வந்திருக்கிறேன்.

இந்த நூற்றாண்டு விழா கொண்டாடுவது நமக்கு மட்டுமல்ல. ராஜாஜியின் ஆன்மாவுக்கும் மகிழ்ச்சி ஊட்டுவதாக இருக்கும்.

ராஜாஜி பிறந்த நாள் விழாவைக் கொண்டாடுவதற்காக முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்துள்ள அரசுக்கு தமிழக மக்கள் சார்பிலும் தேசபக்தர்கள் சார்பிலும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த விழாவில் கலந்து கொண்டதன் மூலம் 73 ஆண்டுகால எனது வாழ்க்கையில் பெரும் பேறு கிடைத்ததாகக் கருதுகிறேன்.

இவ்வாறு சட்ட மேலவைத் தலைவர் ம.பொ.சி. கூறினார்.

நிதியமைச்சர் நாஞ்சிலாருக்கும் ம.பொ.சி.க்கும் திருச்செங்கோடு காந்தி ஆசிரமம்சார்பில் கைத்தறி ஆடைகள் அணிவிக்கப்பட்டன.

### விழா நிகழ்ச்சி

சட்டமன்ற உறுப்பினர்கள் கே. ஆர். சின்னராசு, பி. எம். கிருஷ்ணன், சமரசம், எம். அண்ணாமலை, நாடாளுமன்ற உறுப்பினர்கள் ராமமூர்த்தி, பி. வி. பெரியசாமி, ராமச்சந்திர ரெட்டி, ஜனதாக் கட்சித் தலைவர் எஸ். வி. லட்சுமணன் ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டு பேசினர்.

### இலவச உணவு

விழா நிகழ்ச்சிகளை தொலைக்காட்சி நிறுவனத்தினரும், தமிழக அரசு திரைப்படப் பிரிவினரும் படமாக்கினர்.

விழாவை யொட்டி ஆயிரத்துக்கு மேற்பட்ட ஏழைகளுக்கு இலவச உணவு வழங்கப்பட்டது.

## கழகத்தில் இணைந்த 25 பெண்கள்

சேலம், டிச. 12- சேலம், செவ்வாய்ப்பேட்டையில் உள்ள பெண்கள் 25 பேர் பல்வேறுகட்சிகளிலிருந்து விலகி அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தில் தங்களை இணைத்துக் கொண்டனர். இவர்களில் 17 பேர் தி. மு. க. விலிருந்து விலகியவர்கள் ஆவர்.

காளியம்மாள், காமாட்சி அருக்காணி, பாப்பா, சின்னப்பொண்ணு, தேவகன்னி, பாக்கியம், செல்லம்மாள், சுசிலா, குஞ்சம்மா, வளர்மதி, ராசாமணி, லட்சுமி, பாக்கியம், தெய்வானை வெங்கடம்மாள், பொட்டம்மாள், சகுந்தலா, பங்கஜம், லட்சுமி, கன்னியப்பு, ஜெயலட்சுமி, மணி, விஜயா ஆகியோர் தங்களை கழகத்தில் இணைத்துக் கொண்டனர்.

## 3 ஆயிரம் ஏழை விவசாயிகளுக்கு ரூ.5 லட்சம் உதவி

### அமைச்சர் கே. ஏ கே. வழங்கினார்

தருமபுரி, டிச. 12- வறட்சிப் பகுதியான தருமபுரி மாவட்ட விவசாயிகளின் மறுவாழ்வுக்கு வழிகோலும் வகையில் 3 ஆயிரம் பேருக்கு 5 லட்சம் ரூபாய்க்கான கடனுதவிகளை தமிழக கூட்டுறவுத்துறை அமைச்சர் கே. ஏ. கே. வழங்கினார்.

"அவ்வைப்பாட்டிக்கு நெல்லிக்கனி கொடுத்த அதியமான, சுதந்திரப் போரில் தேசியகவி பாரதியோடு சேர்ந்து போராடிய சுப்பிரமணிய சிவா போன்ற நல்லவர்களைத்தந்த தருமபுரி மாவட்டத்தில் கூட்டுறவுத் துறையில் முந்தைய ஆட்சியில் 48 லட்சம் ஊழல் நடந்திருக்கிறதே" என்று அவர் வருத்தம் தெரிவித்தார்.

தருமபுரி மாவட்டம் காவேரிப்பட்டணம் அருகே உள்ள மலையாண்டஹள்ளி கூட்டுறவு விவசாய வங்கியில்-வறட்சிக்கு இலக்காகும் பகுதித்திட்டம், ஒருங்கிணைந்த கிராம முன்னேற்ற திட்டம் ஆகியவற்றின் கீழ் "குறு" விவசாயிகளுக்கு கடன்வழங்குவிழா நடைபெற்றது.

இந்த நிகழ்ச்சிக்கு மன்ற உறுப்பினர் டாக்டர் சமரசம் தலைமை வகித்தார். சேலம் கூட்டுறவு இணைப் பதிவாளர் எஸ். சம்பந்தம் அனைவரையும் வரவேற்றார் கூட்டுறவு மாவட்ட பதிவாளர் ஏ. ஆரோக்கியம் விழாவில் பேசினார்.

கறவை மாடுகள், உழவு மாடுகள் ஆடுகள், விசைத் தெளிப்பான், நகைக்கடன் வேளாண்மைக் கருவிகள், பால்உற்பத்திக் கருவிகள், பட்டுப் பூச்சி வளர்ப்பு ஆகியவற்றிற்கு மூன்றாயிரம் பேருக்கு 5 லட்சம் ரூபாய்க்கான கடன்தொகைகளை தமிழக கூட்டுறவுத் துறை அமைச்சர் கே.ஏ.கே.வழங்கினார். அமைச்சர் பேசுகையில் கூறியதாவது:

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தேர்தல் காலங்களில் ஒன்றைச் சொன்னார் மிகச்சாதாரண நிலையில் உள்ள கிராமப்புற மக்களுக்கு உதவி செய்வோம் என்றார்.

குறிப்பாக சுதந்திரம் அடைந்து 30 ஆண்டுகளுக்கு மேலாகியும் வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ள மக்களின் முன்னேற்றத்திற்கு எங்களுக்கு வாக்களித்தால் பாடுபடுவோம் என்று கூறினார்.

அதன்படி தருமபுரி மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கியின் சார்பிலும் தேசிய வங்கிகளின் சார்பிலும் 5 லட்சம் ரூபாயை மிக மிகச் சாதாரண நிலையில்உள்ள ஏழை விவசாயிகள் 3 ஆயிரம் பேருக்கு அவர்களுடைய வாழ்க்கை மேம்பாட்டிற்காக இங்கே கடன் உதவி அளிக்கப்படும் நிகழ்ச்சி நடைபெற்றது.

கடன் உதவி பெற்ற விவசாயிகளுக்கு பணிவோடும், அடக்கத்தோடும் சில கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன் இங்கே கடன் உதவிகளைப் பெற்றவர்கள் விளைச்சலைப் பெருக்கி, கடன்தொகையை உரியகாலத்தில் கொடுத்து விடவேண்டும் என்பதை கடமையாக உயிர் மூச்சாகக் கொள்ள வேண்டும்.

அப்படிக் கொடுக்காவிட்டால் உங்களைப் போன்ற ஏழை விவசாயிகளுக்கு அடுத்த ஆண்டு கடன் கொடுக்கமுடியாமல் போய்விடும்.

இந்த மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கிக்கு வர வேண்டிய கூட்டுறவுக் கடன் பாக்கிகள் வந்து சேராததால் இந்த வங்கி செயலற்றுப் போய் இருக்கிறது.

உரியநேரத்தில்கொடுக்க முடிந்தவர்கள்கடன்பாக்கிகளை கொடுத்திருந்தால் அந்த பணத்தை மீண்டும் தேவைப்பட்டவர்களுக்கு விவசாயமேம்பாட்டிற்காக கடன் கொடுத்திருக்க முடியும்.

### தீய சக்தி

சில தீய சக்திகள் கூடி (4-ம்பக்கம் பார்க்க)

## கலைத்துறைக்கு பல்கலைக்கழகம்: ஆர்எம்வீ தகவல்

சென்னை, டிச. 12- இசை சம்பந்தப்பட்ட பல்வேறு கல்லூரிகளை இணைத்து தமிழகத்தில் கலைத்துறைக்கு தனியே ஒரு பல்கலைக்கழகம் அமைப்பது பற்றி ஆலோசிக்கப்படும் என்று அமைச்சர் ஆர். எம் வீ. கூறினார்.

சென்னை ஆழ்வார்பேட்டை லஸ்காலனியில் உள்ள ஆஸ்திக சமாஜத்தில் கடந்த எட்டு நாட்களாக இசைக்கலை விழா நடைபெற்றது.

ராமலிங்கர் பணிமன்றத்தின்சார்பில் நடத்தப்பட்ட இந்தஇசைக்கலை விழாவின் நிறைவு விழாவில் கலந்து கொண்டு அமைச்சர் ஆர் எம் வீ பேசினார்.

ஆர். எம். வீ பேசும் போது கூறியதாவது:

இருபது கோடி ரூபாய் அறநிலையங்களில் இன்னும் பாக்கி வரவேண்டியது இருக்கிறது. ஆண்டவனை வணங்குகிற பக்தர்களான ஆஸ்திகர்கள் தான் அறநிலையங்களை அழித்துக் கொண்டு இருக்கிறார்கள் இப்படி நான் கூறுவதைஇங்குள்ளவர்கள் தவறாகக் கருதக் கூடாது.

அவர்கள் வணங்குகிற ஆண்டவனுக்கே துரோகம் செய்கிறநிலையைஉணர்ந்து அவர்களாகவே மாற்றிக் கொள்ளவேண்டும்.

### இசைப் பாடல்

இசைக் கலைத் துறையிலே ஆற்றல்பெற்ற சுந்தரேசனார் இங்குபேசும் போது தமிழ் நாட்டில் உள்ள கோயில்களில் திருமுருகாற்றுப்படை போன்ற இசைப்பாடல்களை ஒலிபரப்ப ஆவன செய்யவேண்டும் என்றுகேட்டுக்கொண்டார்

அடுத்த ஆண்டு முதல் தமிழ்நாட்டில்உள்ளகோவில்களில்திருமுருகாற்றுப்படை போன்ற இசைப் பாடல்களை ஒலிபரப்ப ஆவன செய்யப்படும். இவற்றுக்கு சுந்தரேசனார் போன்ற இசைக்கலை வல்லுநர்கள் உதவவேண்டும்.

### தமிழ் வாழ

இதற்கு முன்பு இது போன்ற பொறுப்புக்களை ஏற்றுக்கொள்பவர்கள். நழுவி ஓடிவிட்ட காரணத்தினாலேதான் இத்தகைய காரியங்கள் நடைபெறாமல் போயின.

இதுபோன்ற இசைக்கலை விழாவை ஆண்டு தோறும் நடத்த முன்வருவீர்களேயானால் அதை அரசு பரிசீலிக்கும் இந்த முயற்சி தொடர்ந்தால் தமிழும், தமிழ் இசையும் வாழும், வளம்பெறும்.

### இசைப் பல்கலைக் கழகம்

தமிழ்நாட்டில் கருநாடக இசைக் கல்லூரி, தமிழ் இசைக் கல்லூரி மற்றும் இசை சம்பந்தப்பட்ட பல்வேறு கல்லூரிகள் எல்லாம் உள்ளன. இவைகளை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரு தனிப் பல்கலைக் கழகமாக அமைக்கலாமா என்ற எண்ணம் இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசும்போது கூறினார்.

## அமைச்சர் எஸ். டி. எஸ். நிகழ்ச்சிகள்

தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். சுற்றுப்பயண நிகழ்ச்சிகள் விவரம் பின்வருமாறு.

டிசம்பர் 13ம் தேதி கோவில்பட்டி, 14ம் தேதி சென்னை, 15ம்தேதி கம்பம், 16ம்தேதி சிவகங்கை, 17ம் தேதி சென்னை ஆகிய ஊர்களில் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார்.

## குமராட்சியில் அமைச்சர் பண்ருட்டி

காட்டுமன்னார்குடி, டிச. 12- குமராட்சி ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த தில்லை நாயகபுரம் பள்ளிக்கட்டிடத்தை அமைச்சர்பண்ருட்டிராமச்சந்திரன் திறந்துவைத்தார் காட்டுமன்னார்குடி சிதம்பரம் தாலுக்காக்களில் வெள்ளத்தால் பாதிக்கப் பட்டபல பகுதிகளை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பார்வையிட்டு நிவாரணப்பணிகளை துரிதப்படுத்தினார்.

## சலவைத் தொழிலாளருக்கு கோலப்பா வேண்டுகோள்

சென்னை, டிச.12- சலவைத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு (லாண்டரி - டிரைகிளினிங் சலவைச்சாலை தொழிலாளர் குறுமக் கூலி சீராய்வு ஆலோசனைக் குழு உறுப்பினர் சி. ஆர். கோலப்பா ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

புரட்சித்தலைவர் ஆட்சியில் லாண்டரி டிரைக்கிளினிங் சலவைத் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு குறைந்த பட்சக் கூலி நிர்ணயக் குழு அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் தங்களுடைய தொழில் நிலைமைகளையும் சம்பளம் நிலைமைகளையும் 70 பின்னியார் கோவில் தெரு, சென்னை 30 என்ற முகவரியில் குழு முன்னிலையில் தெரிவிக்குமாறு கோலப்பா கேட்டுக் கொண்டுள்ளார்.

## இரு காங்கிரஸ் இணைப்பு உறுதி என்கிறார் அர்ஸ்

பெங்களூர், டிச. 12- இரண்டு காங்கிரஸ் கட்சிகளும் இணைவது உறுதி என்று கருநாடக மாநில முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ் கூறினார்.

இரண்டுகாங்கிரஸ் கட்சிகளும் இணைய வேண்டும் என்று இந்திராகாந்தி கோரிக்கை விடுத்தார். அதை காங்கிரஸ் தலைவர் சுவரண்சிங், சி. சுப்பிரமணியம், வி. பி. நாயக் மற்றும் பல தலைவர்கள் ஆதரித்தனர். சவாண் கோஷ்டி இணைப்பிற்கு எதிர்ப்பு தெரிவித்தது.

இரு காங்கிரஸ் இணைப்பு பற்றி தேவராஜ் அர்ஸிடம் கேட்டபோது. "இணைப்பிற்கு பெரிய தடைகள் எதுவும் இல்லை. சிறிய தடைகளும்விரைவில் நீங்கிவிடும். இரண்டு காங்கிரசும் இணைவது உறுதி. அதற்கான காலம் கனிந்து கொண்டு இருக்கிறது" என்று கூறினார்.

# அண்ணா

சந்தா விவரம்
1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30
3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது
நிர்வாகி
"அண்ணா"
அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600 014.


# தமிழகத்தில் தொழில் துவக்க வெளிநாட்டினர் ஆர்வம்

## முதல்வர் புரட்சித்தலைவர் தகவல்

ஊட்டி டிச. 12- தமிழ்நாட்டில் தொழில் துவக்குவதற்கு வெளிநாட்டில் உள்ளவர்கள் ஆர்வமாக இருக்கிறார்கள் என்று முதல்வர் புரட்சித்தலைவர் நிருபர்களுக்கு அளித்த பேட்டியின் போது தெரிவித்தார்.

தமது வெளிநாட்டு சுற்றுப்பயணம் குறித்து நிருபர்களிடம் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:

அமெரிக்காவில் தங்கியிருந்தபோது காவல்துறையின் செயல்பாடு குறித்து நேரில் அறிந்தேன்.

குற்றங்களை எப்படி தடுக்கிறார்கள், நடந்த குற்றங்களை எப்படி கண்டுபிடிக்கிறார்கள். குற்றப்புலனாய்வு எப்படி நடக்கிறது என்பதையெல்லாம் நேரில் அறிந்தேன்.

நான் போயிருந்தபோது வாஷிங்டன் நகரில் கவர்னர் பதவிக்கான தேர்தல் நடந்தது. வாக்குப்பதிவு நடக்கும் இடங்களில் போலீசார் இல்லை. எந்தவித சத்தமும் இல்லை.

வேட்பாளர்கள் சுவரொட்டி ஒட்டுவதில்லை. வீடுகளுக்குமுன் உள்ள புல்தரையில் ஒரு சிறுகுச்சியை நட்டு வேட்பாளர் பெயரை எழுதி வைத்திருக்கிறார்கள்.

வாக்குச்சாவடிக்கு அடையாள அட்டைகளுடன் வாக்காளர்கள் செல்கிறார்கள். கள்ள ஓட்டு என்பதோ ஏமாற்றுவதோ அறவே இல்லை,

அத்தகைய நாகரிகம் இங்கு வந்தால் எவ்வளவு சிறப்பாக இருக்கும் என்று எண்ணிப் பார்த்தேன்.

### குடிப்பது தற்கொலையே

மது விலக்கு பற்றி வெளிநாடுகளில் உங்களிடம் கேட்கவில்லையா? மது குடிப்பதைத் தடுப்பது தனி நபர் சுதந்திரத்தில் தலையிடுவதாகாதா? இது பற்றி வெளிநாடுகளில் கேட்கவில்லையா என்று முதல்வரிடம் நிருபர்கள் கேட்டனர்.

அதற்கு புரட்சித்தலைவர் பதிலளித்து கூறியதாவது:

தற்கொலை செய்து கொள்வது ஒரு தனி மனிதனின் சுதந்திரம் என்பதற்காக அதனை அனுமதித்துவிட முடியுமா?

மதுவை குடிப்பது என்பதும் தற்கொலைக்கு ஒப்பானதுதான்.

"தன் உடலைக் கெடுத்துக் கொண்டு, தனது உயிருக்கும் ஆபத்து ஏற்படுத்திக் கொண்டு தனது சந்ததிக்கும் ஆபத்து ஏற்படுத்துகிறார்களே! இது எப்படி தனிமனித சுதந்திரம் ஆகும்?" என்று புரட்சித்தலைவர் கேட்டார்.

முதல்வர் மேலும் கூறியதாவது:-

சிங்கப்பூரில் உள்ள தொழில் அதிபர்களை சந்தித்தேன். அவர்களுக்கு ஏற்பட்டிருந்த அச்சத்தையும் சந்தேகத்தையும் போக்கினேன்.

தமிழகத்தில் வந்து ஆங்காங்கு சிறு தொழில்களைத் தொடங்குமாறு வேண்டுகோள் விடுத்துள்ளேன்.

சிறு தொழில்களை தொடங்குவதன் வாயிலாகத்தான் வேலைவாய்ப்பு பெருகும் என்பதை எடுத்துக்கூறினேன்.

காகிதத் தொழிற்சாலை ஆல்கலி கெமிகல் தொழிற்சாலை இவை பற்றியும் பேசி முடித்துள்ளோம்.

### புதிய முறை தடுப்பு

இதைப்போல அமெரிக்காவில் குடியேறியுள்ள இந்தியர்களும், தமிழகத்தில்தொழில் ஆரம்பிக்க ஆர்வமாக உள்ளனர்.

சிங்கப்பூர், ஹாங்காங், ஜப்பான், ஆகியநாடுகளில் கடல் அரிப்பைத் தடுப்பதற்கு செய்யப்படும் முயற்சிகளை நேரில் பார்த்தேன்.

இவற்றில்சிங்கப்பூர்முறை நமக்கு பொருத்தமானதாக இருக்கிறது.

சிங்கப்பூரில் உள்ள என்ஜினியர்களுடன் இரண்டு மணிநேரம் கடல் அரிப்பைத் தடுக்கும் திட்டம் பற்றி விவாதித்தேன்.

கடல் அரிப்பை தடுக்கும் வேலை நடைபெறுவதை நேரில் சென்றுபார்த்தேன்.

கடல்அரிப்பைத்தடுப்பது பற்றி சிங்கப்பூர் அரசினர் ஒரு திரைப்படம் தயாரித்துள்ளனர். அரைமணி நேரம் ஓடும் அந்தப் படத்தையும்பார்த்தேன்.

கடல்அரிப்பு பகுதியில் முதலில் "பைபாஸ்" ரோட் போடுகிறார்கள். புல்தரை வளர்க்கிறார்கள். பூங்கா அமைக்கிறார்கள். குழந்தைகள் பூங்கா அமைக்கிறார்கள் இப்படிப் படிப்படியாகக் கடல் அரிப்பைத் தடுக்கிறார்கள்.

இது நமக்கு மிகவும் பொருத்தமான முறையாக இருக்கிறது.

அமெரிக்காவில் இருந்தபோது, மாணவர் சங்கங்களைப் பார்த்தேன். மாணவர்களேவசூல்செய்து தங்கள் சங்கங்களுக்கு சொந்தக்கட்டிடங்கள் கட்டியிருக்கிறார்கள்.

### கருணாநிதி விளம்பர வெறி

ஒரு கல்லூரியில் ஆசிரியர் வகுப்புக்கு தாமதமாக வந்தார். மாணவர்கள் இது பற்றி ஆசிரியரையே கேள்விகேட்டனர். கடைசியில் ஆசிரியரே மாணவர்களிடம் மன்னிப்புக் கேட்டார், அந்த அளவு படிப்பில் அங்கு மாணவர்கள் கவனம் செலுத்துகிறார்கள்.

அங்கு மாணவர்கள் அரசியலை அறிந்து வைத்துள்ளனர். அரசியல் தொடர்புதானே தவிர எந்தக் கட்சியுடனும் மாணவர்கள் தொடர்பு கொள்வதில்லை.

சோஷலிசவாதியாகிய தாங்கள் அமெரிக்காவின் முறைகளை ஏற்றுக் கொள்ளலாமா என்று ஒரு நிருபர் கேட்டார்.

நாம் சட்டை போடுகிறோம். எப்படிப்பட்ட சட்டை போடுவது என்று நாமே முடிவு செய்கிறோம். சட்டையை நாமே நம் விருப்பப்படி தைத்துக் கொள்கிறோம். துணியை எங்கிருந்து வாங்கினால் என்ன? அதில் தவறுஇல்லை என்று முதல்வர் பதிலளித்தார்.

## காண்ட்ராக்ட்தொழிலாளர்

# மாநில ஆலோசனை குழுக்கூட்டம் சென்னையில்நடந்தது

சென்னை, டிச 12- காண்டராக்ட் தொழிலாளர் மாநில ஆலோசனைக் குழுக்கூட்டம் சென்னையில் நடந்தது கூட்டத்தில் பலமுக்கிய முடிவுகள் எடுக்கப்பட்டன,

தொழிலாளர்துறை செயலாளர் சி. ராமச்சந்திரன் தலைமையில் நடந்தகூட்டத்தில்தொழிலாளர் நலத்துறை ஆணையர் சு. நரசிம்மன், அண்ணா தொழிற்சங்கப் பேரவைப் பொதுச் செயலாளர் வை. பெருமாள் மற்றும் அதிகாரிகளும்தொழில்அதிபர்களின் பிரதிநிதிகளும் தொழிற்சங்கப் பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர்.

தமிழகத்தில் காண்ட்ராக்ட் முறையில் பணியாற்றி வருகிற தொழிலாளர்கள்தொழிலாளர்களின் குறைகளை இதற்கு முந்திய அரசுகள் கவனிக்கவில்லை. உழைக்கின்ற வர்க்கத்தின் ஒப்பற்ற தலைவர் புரட்சித்தலைவர் அரசு ஆட்சிப்பொறுப்பேற்றபிறகுகாண்ட்ராக்ட் தொழிலாளர்களின் நலனில் அக்கறை கொண்டு தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறது.

### முக்கிய முடிவுகள்

அந்த வகையில் கடந்த 8-ந்தேதி நடந்த கூட்டத்தில் பல்வேறு முடிவுகள் எடுக்கப்பட்டன.

குறிப்பாக திருச்சி (பாரத்ஹெவிஎலக்ட்ரிகல்) திருவெறும்பூர் பகுதி இன்ஜினியரிங் தொழிலாளர்களின் வேலை நிலைமைகள் குறித்து ஆராய்ந்து முடிவெடுத்து சிபாரிசு செய்ய தொழிலாளர்கள் சார்பில் அண்ணா தொழிற்சங்கப் பேரவைப் பொதுச் செயலாளர் வை. பெருமாள் தொழிலதிபர்கள் சார்பில் ஏ. கே. நடராசன் ஆகியோர் நியமிக்கப்பட்டனர்.

சிமெண்ட் ஆலை காகித ஆலை என்ஜினியரிங் மேக்னசைட் போன்ற பல்வேறு ஆலைகளில் காண்ட்ராக்ட் முறையில் பணியாற்றுகிற தொழிலாளர்களின் வேலை நிலைமை ஊதியம் குறித்து விவாதிக்கப்பட்டது.

## கழகச்செய்திகள்

### கோவை

கோவை தெப்பக்குளம் மைதானத்தில் நடந்த வன்முறைக் கண்டனப் பொதுக் கூட்டத்தில் அமைச்சர் பி.டி. சரஸ்வதி இரா, அண்ணநம்பி, சண்முகசுந்தரம் ஆகியோர் பேசினர்.

கோவை ராமநாதபுரத்தில் நடந்த கழகப் பொதுக்கூட்டத்தில் சமூக நல அமைச்சர் பி. டி. சரஸ்வதி, மருதாசலம் எம். எல். ஏ., கோவை மாவட்ட அமைப்பாளர், கோவைத் தம்பி டாக்டர் சக்கரியா மற்றும் பலர் பேசினர்.

# ஏழை விவசாயிகளுக்கு ரூ. 5 லட்சம் உதவி...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

டுறவு கடன்களைத் திருப்பிக் கொடுக்கக் கூடாது என்று சொல்லுகின்றன. இந்த மத்தியவங்கிகளுக்கு ரிசர்வ் வங்கி என்னை நம்பியா- அதிகாரிகளை நம்பியா கொடுக்கிறது. அதற்கு முதலமைச்சர் கையெழுத்துப் போடுகிறார்.

முதலமைச்சர் கையெழுத்துப் போட்டு கடன் வாங்குகிறார் என்றால் இந்த நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்காகவும் அவர் கையெழுத்துப் போடுகிறார் என்று பொருள். உலகவங்கியில் இருந்து மத்திய அரசின் சார்பில் பிரதமர் கையெழுத்துப் போட்டு கடன் வாங்குகிறார் என்றால் இது இந்திய நாட்டின் 60 கோடி மக்கள் ஒவ்வொரு பிரஜையும் கையெழுத்துப் போட்டு பணம் வாங்குவதாக பொருள். அது நம்மோடு முடிந்து விடுவதில்லை. நம்முடைய பிள்ளைகளுக்கும் அந்த கடனை திருப்பிக் கொடுப்பதில் கடமை என்ற பங்கு இருக்கிறது.

முன்பு ஆட்சியில் இருந்தவர்கள் பட்டா கொடுக்க வேண்டும் என்று கூறுவார்கள். நிலமே இல்லை என்று அதிகாரிகள் தெரிவித்தால் பட்டாக்களை கொடுங்கள் பிறகு பார்த்துக் கொள்ளலாம என்று வெறும் காகிதங்களை சில இடங்களில் கொடுத்திருக்கிறார்கள்.

### மாணவர் அக்கறை

எப்படி வாழுகிறோம் என்பதுதான் முக்கியமே தவிர எவ்வளவு நாள் வாழ்கிறோம் என்பது முக்கியமில்லை புரட்சி என்பது ஒரே நாளில் தோன்றிவிடுவதில்லை. குந்த கூட வீடு இல்லாதவன் 10 வீடு வைத்திருக்கிறவனைப் பார்த்துஏங்குகிறான். பிறகு கொதித்து எழுகிறான் - புரட்சி உண்டாகிறது.

இங்கே கோட்டுப் பூச்சி வளர்க்க, ஆட்டுப்பண்ணை வைக்கபால்பண்ணை வைக்க கடன்கொடுத்திருக்கிறோம். குடிசைக்கு இடம் கொடுத்திருக்கிறோம், இவற்றின் மூலம் இல்லாதவர் மனத்தில் உலைந்து கொண்டு இருக்கும் வேகத்தை சற்று அடக்கமுடியும் இதை எல்லாம் சாதனை என்று முதல்வர் புரட்சித்தலைவர் சொல்லவில்லை இதெல்லாம் எங்கள் கடமை என்றுதான் அவர் சொல்லுகிறார்.

இந்தச் சிறு உதவிகளைச் செய்வதாக இருந்தால்கூட கருணாநிதி ஆட்சிக் காலத்தில் பெரிய பெரிய போஸ்டர்கள் 1500-2000 என்று ஒட்டியிருப்பார்கள்.

சுதந்திர போராட்டத்தில் தேசியகவி பாரதியோடு சேர்ந்து பாடுபட்டவர் சுப்பிரமணியசிவா. அவ்வைப்பாட்டிக்கு நெல்லிக் கனி கொடுத்து உபசரித்த அதியமான் வாழ்ந்த இடம், இவை இரண்டும் மனத்திற்கு பெருமை தருகின்றன.

ஆனால் மத்திய கூட்டுறவு வங்கியை நினைத்துப் பார்த்தால் நம் சிந்தனைகள் இற்றுப் போகிற அளவுக்கு நிகழ்ச்சிகள் நடந்து இருக்கின்றன.

ஊழல் செய்தவன் எல்லாம் இன்றைக்கு "மணமகன்" போல வலம் வந்து கொண்டிருக்கிறான். தருமபுரியில் உள்ள 272 கூட்டுறவு சங்கங்களில் 61 சங்கங்களில் மட்டும் 48 லட்சம் ரூபாய் ஊழல் நடந்திருக்கின்றது.

பினாமிக்கடன், போகாத ஊருக்குப் போனதாக பயணப்படிபெற்றது வங்கியின் காரை தகாதகாரியங்களுக்குப் பயன்படுத்தியது இன்னும் பலதரப்பட்ட ஊழல்கள் நடந்திருக்கின்றன. இவற்றுக்கு சட்டப்படியான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

இந்த இடத்திற்கு பக்கத்திலே உள்ள பவானி நகர வங்கியில் ஒருவரே 50 ஆண்டுகாலம் தலைவராக இருந்திருக்கிறார். தலைவருக்கு உள்ள சில உரிமைகளைக்கூட அவர் அனுபவித்தது இல்லை. அவர் 50 ஆண்டுகாலம் தலைவராக இருந்ததற்காக விழா ஒன்று கொண்டாடப்பட்டது அந்த விழாவுக்கு நானும் போய் இருந்தேன். பெருமாள் செட்டியார் என்ற 70 வயதான அவர் இன்னும் தலைவராக இருக்கிறார். அவரை அந்த ஊர் மக்கள் கடவுளைப் போல போற்றுகிறார்கள்.

அவரைப்போன்ற நல்லவர்கள் கூட்டுறவு இயக்கத்தில் இருந்தார்கள் நல்ல விதை விதைக்கப்பட்டபோதிலும் நல்ல பயிர் முளைத்து வரும்போது சில "புல்லுருவிகள்" பயிர்களுக்குஇடையே முளைத்து விடுவதைப்போல சில தீயவர்கள் இந்த கூட்டுறவு இயக்கத்தை சீர்குலைக்கப் பார்த்தார்கள்.

அந்தப் புல்லுருவிகளை களைவதில் புரட்சித்தலைவர் அரசு உறுதியாக இருக்கிறது. ஏழைகளின் கண்ணீரையும் களைய வேண்டும் என்பதில் புரட்சித்தலைவர் தலைமையில் அரசு மிகுந்த அக்கறையோடு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது" இவ்வாறு அமைச்சர் கே, ஏ. கே. பேசினார்.













தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை 600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி